உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# விநாயககவசம், சிவகவசம்,

## சத்திகவசம், சரசுவதிதோத்திரம், இலக்குமிதோத்திரம்.

இவ்வைந்தும்
சமிவனக்ஷேத்திரமென்னுங்
கோயிலூர்
ஸ்ரீ - முத்துராமலிங்கசுவாமிகளின்
ஆதீனத்திற்குரிய
ஸ்ரீ - சிதம்பரசுவாமிகள்
மாணாக்கர்களிலொருவராகிய
அ - இராமசாமிச்சுவாமிகளால்
பலருடையவேண்டுகோளின்படி
பலபிரதிரூபங்களைக்கொண்டு
பரிசோதித்து

சென்னை:
மிமோரியல் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.

இரண்டாம்பதிப்பு.

நந்தன வரு சித்திரை மீ.

இதன்விலை அணா - க.

# விளம்பரம்.

---

## அ - இராமசாமிச்சுவாமியவர்களால்
## அச்சிற்பதிப்பிக்கப்பட்ட

கருமம், பக்தி, யோகம், ஞானம், இவைகளுக்குரிய:—
இப்புத்தகங்கள் சிதம்பரம் ஆயிகுளந் தென்கரையிலி
ருக்கும் - அ - இராமசாமிச்சுவாமிகள் புதுமடாலயத்திலும்,
சென்னபட்டணம் முத்தியாலுப்பேட்டை மண்ணடிக்கடுத்த
முத்துமாரிசெட்டிதெருவு ௩௯ - வது நெம்பர் வீடு வே-ஆறு
முகம்பிள்ளை யவர்களிடத்திலும், ஷை சென்னபட்டணம்
முத்தியாலுப்பேட்டை பவழக்காரத்தெருவு ௨௮ - வது நெ
ம்பர் வீடு - மு - ரு - க - கடையிலும், ௩௧ - வது நெம்பர்
வீடு - கும - பெரி - கடையிலும், ௧௪௩ - வது நெம்பர் வீடு-
ம - மு - கடையிலும், ஷை சிதம்பரந் தேரோடுங் கீழை
இ ஸ்ரீமத். மு - சதா - சதாசிவதீக்ஷிதசுவாமியவாளிடத்
திலும், மதுரை புதுமண்டபத்திற் புத்தகவியாபாரஞ்செய்
யும் சண்முகம்பிள்ளையவர்களிடத்திலும், கிரயத்துக்குப்
பெற்றுக்கொள்ளலாம்.

பலருடைய வெண்டுகோளின்படி இன்னம் பல அரு
மையான சாஸ்திரங்கள் அச்சிட்டு வெளிப்படுத்தப்படும்.

ஷை புஸ்தகங்கள் வேண்டுமானால், வெளியூரார் புத்த
கக்கிரயமும், ஷைபுஸ்தகங்களை வருவித்துக்கொள்ள ஸ்டாம்பு
ஒட்டும் தபாற்செலவும், ஷைபுஸ்தகங்கள் தவறிப்போகாமல்
போஸ்டாபிசார் ஒப்பித்தற் கேதுவான ரிசிஸ்தர்ச்செலவும்,
ஷைக்காகத் தெரிவிக்குங் கடிதச்செலவுஞ் சேர்த்து ரூபாயை
மணிஆர்டர்செய்து புத்தகங்களை பெற்றுக்கொள்ளலாம்.

வாலியூபேயே பிலனுப்பக்கேட்கிறவர்கள் தபால்சார்ச்
சும் மணியார்டர் பீசும் முன் அனுப்பவேண்டும்.

கணபதி துணை.

# விநாயககவசம்.

---

ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர் முற்கலமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவியமுனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசிமுனிவருக்கு உபதேசித்தருள, அவர் பலமுனிவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளிச்செய்தனரென் றறிக.

நித்தியகருமங்களை முடித்துப் ப... தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்ட மனதுடனே விநாயகரைத்தியானித்து இதைச் செபிக்கவேண்டும்.

வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா யகர்காக்க வாய்ந்த சென்னி, யளவுபடா வதிகசவுந் தரதேக மதோற்கடர்தாமமர்ந்து காக்க, விளரறநெற் றியையென்றும் விளங்கியகாசிபர்காக்க புருவந்தம்மைத், தளர்வின்மகோ தரர்காக்க தடவிழிகள் பாலசந் திரனார் காக்க. (க)

கவின்வளரு மதரங்கச முகர்காக்க தாலங்கணக் கிரீடர்காக்க, நவில்சிபுகங் கிரிசைசுதர் காக்கநனி வாக்கைவிநா யகர்தாங் காக்க, வவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ் செவிபாசபாணிகாக்க, தவிர்தலுறு திளங்கொடிபோல் வளர்மணிநா சியைச்சிந்தி தார்த்தர் காக்க. (௨)

காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி காக்ககளங் கணேசர்காக்க, வாமமுறு மிருதோளும் வயங்குகந்த பூர்வசர்தாமகிழ்ந்து காக்க, வேமமுறு மணிமுலைவிக் கினவினா சன்காக்க விதயந் தன்னைத், தோமகலுங் கணநாதர் காக்க வகட்டினைத் துலங்கே ரம்பர் காக்க. (௩)

பக்கமிரண் டையுந்தரா தரர்காக்க பிருட்டத்தைப் பாவ நீக்கும், விக்கினக ரன்காக்க விளங்கிலிங்கம் வியாளபூ டணர்தாங்காக்க, தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்க சகனத்தையல்ல, லுக்ககண பன்காக்க வூருவைமங் களமூர்த்தி யுவந்து காக்க. (௪)

தாழ்முழந்தாண் மகாபுத்தி காக்கவிரு பதமேக தந்தர்காக்க, வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்க முன்கையை வணங்குவார்நோ, யாழ்தரச்செய் யாசாபூ ரகர்காக்க விரல்பதும வத்தர்காக்க, கேழ்கிளரு நகங்கள்விநாயர்காக்க கிழக்கினிற்புத் தீசர் காக்க. (௫)

அக்கினியிற் சித்தீசர் காக்கவுமா புத்திரர்தென் றிசை காக்க, மிக்கநிரு தியிற்கணே சுரர்காக்க விக்கினவர்த் தனர்மேற்கென்னுந், திக்கதனிற் காக்க வாயுவிற்கசகன் னன்காக்க திகழுதீசி, தக்கநிதி பன்காக்க வடகிழக்கிலீசநந் தனரேகாக்க.

ஏகதந்தர் பகன்முழுதுங் காக்கவிர வினுஞ்சந்தி யிரண்டன் மாட்டு, மோகையின்விக்கினகிருது காக்க விராக் கதர்பூத முறுவே தாள, மோகினிபே யிவையாதி யுயிர்த்திறத்தால் வருந்துயரு முடிவி லாத, வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா சாங்குசர்தாம் விரைந்து காக்க. (௭)

மதிஞானந் தவந்தான மானமொளி புகழ்குலம்வண் சரீரமுற்றும், பதிவான தனந்தானி யங்கிரக மனைவிமைந்தர் பயினட்பாதிக், கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க காமர்பவுத் திரர்முன் னனை, விதியாருஞ் சுற்றமெலா மயூரேச ரெஞ்ஞான்றும் விரும்பிக் காக்க. (அ)

வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி யாதியெலாம் விகடர் காக்க, வென்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ திடினும்பா வி

டைபூரென்று, மொன்றுரு முனிவரர்கா ளறிமின்கள் யாரொருவ ரோதினாலு, மன்றவாங் கவர்தேகம் பிணியறவச் சிரதேக மாகி மன்னும். (௯)

## விநாயககவசமுற்றிற்று.

பத்தியுடனே இந்தக்கவசத்தைப் பாராயணஞ் செய்பவர்களுக்குப் பிணியும், வறுமையும், பேய் பூதங்களாலுண்டாகின்ற பலதுன்பங்களும், கவலைகளும், பாபமுதலியவைகளும், நீங்கும். அன்றியும், பெருஞ்செல்வமும், தீர்க்காயுளும், களத்திரபுத்திர மித்திராதிகளும், உண்டாகும். அன்றியும், யாத்திரையிலே இதைச் செபித்தால், சகலவிக்கினமும் போய்ப் பயன்களெல்லாம் கைகூடும். யுத்தத்திலே இதனைச் சொன்னால் சயமுண்டாகும். இருபத்தொருநாள் நாளொன்றுக்கு ஏழுமுறை தோத்திரஞ்செய்தால், மாரண நீங்குவதன்றி உச்சாடணம் ஆகருஷணம் ஸ்தம்பன முதலியவைகள் பயனுறும். இருபத்தொருநாள் நித்தியம் இருபத்தொருதரஞ்செபித்தால், சிறையிருப்பு விடுதலாவதுமன்றி, அரசர்களுடைய நிஷ்டூரமு நீங்கும். அரசனைக்காணப்போகும்போது பத்தியினால், மூன்றுதரம் இதை ஓதினால் அவன் வசப்படுவான். இதைப்படித்தாலும், ஒருவர் சொல்லக்கேட்டாலும், பூசித்தாலும், எப்படிப்பட்ட அன்பமும் நீங்கும்.

சிவமயம்.

# சிவகவசம்.

---

இந்தக்கவசம் பத்திராயுவென்னும் இராசகுமாரனுக்கு விடபமுனி அருளிச்செய்ததென்று நைமிசாரணிய முனிவருக்குச் சூதமகாமுனிவர் அநுக்கிரகித்தது.

பங்கயத் தவிசின் மேவி யிருந்துடற் பற்று நீக்கி, யங்குநற்
பூத சுத்தி யடைவுடன் செய்த பின்னர்க், கங்கையைத் தரித்
த சென்னிக் கற்பக தருவைச் செம்பொற், கொங்கைவெற்ப
னையபச்சைக்கொடியொடுமுளத்தில்வைத்தே. (௧)

அகிலநா யகனாய் ஞான வானந்த ரூபி யாகித்
துகடரு மணுவாய் வெற்பின் றோற்றமா யுயிரை யெல்லாந்
தகவுட னவனியாகித் தரிப்பவ னெம்மை யிந்த
மகிதல மதனிற் றீமை மருவிடா தருளிற் காக்க. (௨)

குறைபுன லுருவங் கொண்டு சூழ்தொறும் பயன்க ணல்கித்
தரையிடையுயிர்கள் யாவுந் தளர்ந்திடா வண்ணங்காப்போ
னிறைநிறை முகில்க ளீண்டி நெடுவரை முகட்டிற் பெய்யும்
விறைபுன லதனுள் வீழ்ந்துவிளிந்திடாதெம்மைக் காக்க (௩)

கடையுகந் தன்னி லெல்லா வுலகமுங் கடவுட் டீயா
லடலைசெய் தமலை தாள மறைதர நடிக்கு மீச
னிடைநெறி வனைதா பத்தி லெறிதரு சூறைக் காற்றிற்
றடைபடா தெம்மை யிந்தத் தடங்கட லுலகிற் காக்க. (௪)

தூயகண் மூன்றி னோடு சுடரும்பொன் வதன நான்கும்
பாயுமான் மழுவி னோடு பகர்வர தாப யங்கண்
மேயதிண் புயங்க ணான்கு மிளிருமின் னனைய தேசு
மாயதற் புருட னெம்மைக் குணதிசை யதனிற் காக்க. (௫)

மான்மழு சூலந் தோட்டி வனைதரு மக்க மாலை
கூன்மலி யங்கு சந்தீத் தருமகம் கொண்ட செங்கை
நான்முக முக்க ணீல நள்ளிருள் வருணங் கொண்டே
யான்வரு மகோர மூர்த்தி தென்றிசை யதனிற் காக்க. (ரு)

திவண்மறி யக்க மாலை செங்கையோ ரிரண்டுந் தாங்க
வவிர்தரு மிரண்டு செங்கை வரதத்தோ டபயந் தாங்கக்
கவினிறை வதன நான்குங் கண்ணொரு மூன்றுங் காட்டுந்
தவளமா மேனிச் சத்தியோ சாதன்மேற் றிசையிற் காக்க.

கறைகெழு மழுவு மானு மபயமுங் கண்ணிறும
மறைதரு தொடையுஞ் செய்ய வங்கைக ணான்கு மேந்திப்
பொறைகொணான் முகத்துமுக்கட் பொன்னிற மேனியோடு
மறைபுகழ் வாம தேவன் வடதிசை யதனிற் காக்க. (அ)

அங்குசங் கபாலஞ் சூல மணிவர தாப யங்கள்
சங்குமான் பாச மக்கந் தமருகங் கரங்க ளேந்தித்
திங்களிற் றவள மேனி திருமுக மைந்தும் பெற்ற
வெங்களீ சான தேவ னிருவிசும் பெங்குங் காக்க. (கூ)

சந்திர மவுலி சென்னி தனிநுதற் கண்ண னெற்றி
மைந்துறு பகன்கண் டொட்டோன் வரிவிழி யகில நாதன்
கொந்தணர் நாசி வேதங் கூறுவோன் செவிக பாலி
யந்தில்செங் கபோலந் தூய வைம்முகன் வதன முற்றும். ()

வளமறை பயிலு நாவ னுமணி நீல கண்டன்
களமடு பிநாக பாணி கையிணை தரும வாகு
கிளர்புயந் தக்கன் யாகங் கெடுத்தவன் மார்பு தூய
வொளிதரு மேரு வில்லி யுதரமன் மதனைக் காய்ந்தோன். ()

# சிவகவசம்.

இடையிப முகத்தோன் றுதை யுந்திநம் மீசன் மன்னும்
புடைவள ரறாகு பேர மித்திரன் பொருவில் வாமம்
படர்சக நீசன் சானு பாய்தரு மிடப கேது
மிடைதருகணைக்காலெந்தை விமலன்செம்பாதங்காக்க. ()

வருபகன் முதல்யா மத்து மகேசன்பின் னிரண்டாம் யாமம்
பொருவறு வாம தேவன் புகன்றிடு மூன்றும் யாமுஞ்
செருமலி மழுவா ளங்கைத் திரியம்பக னாலாம் யாமம்
பெருவலி யிடப வூர்தி பிணியற வினிது காக்க. (கங)

கங்குலின் முதல்யா மத்துக் கலைமதி முடித்தோன் காக்க
தங்கிய விரண்டாம் யாமஞ் சானவி தரித்தோன் காக்க
பொங்கிய மூன்றும் யாமம் புரிசடை யண்ணல் காக்க
பங்கமி னாலாம் யாமங் கௌரிதன் பதியே காக்க. (கச)

அனைத்துள கால மெல்லா மந்தகற் கடிந்தோ னுள்ளுந்
தனிப்பெரு முதலாய் நின்ற சங்கரன் புறமுந் தாணு
வனப்புறு நடுவுந் தூய பசுபதி மற்று மெங்கு
நினைத்திடற் கரிய நோன்மைச் சதாசிவ நிமலன் காக்க. ()

நிற்புழிப் புவன நாத னேகுழி நிமல மேனிப்
பொற்பிர மதாதி நாத னிருப்புழிப் பொருவி லாத
வற்புத வேத வேத்திய னருந்துயில் கொள்ளு மாங்கட்
டற்பர சிவன் வழிக்குச் சாமள ருத்திரன் காக்க. (கசு)

மலைமுதற் றுருக்கந் தம்மிற் புராரிகாத் திடுக மன்னுஞ்
சிலைவலி வேட ரூபன் செறிந்தகா னகத்திற் காக்க
கொலையமர் கற்பத் தண்ட கோடிகள் குலுங்க நக்குப்
பலபடி நடிக்கும் வீர பத்திரன் முழுதுங் காக்க. (கஎ)

பல்லுளைப் புரவித் திண்டேர் படுமதக் களிறு பாய்மா
வில்லுடைப் பதாதி தொக்கு மிடைந்திடு மெண்ணில் கோடி
கொல்லியன் மாலை வைவேற் குறுகலர் குறுகுங் காலை
வல்லியோர் பங்கன் செங்கை மழுப்படை அணித்துக்காக்க.

தத்துநீர்ப் புணரி யாடைத் தரணியைச் சுமந்து மானப்
பைத்தலை நெடிய பாந்தட் பஃறலை யனைத்துந் தேய்ந்து
முத்தலை படைத்த தொக்கு மூரிவெங் கனல்கொள் சூலம்
பொய்த்தொழிற்கள்வர்தம்மைப் பொருதழித்தினிதுகாக்க.

முடங்குளை முதலா யுள்ள முழுவலிக் கொடிய மாக்க
ளடங்கலும் பிறைகங் கொல்க வென்றிவை யனைத்துமுள்ளங்
இடம்பட நினைந்து பாவஞ் செயுஞ்சிவ கவசந் தன்னை
யுடன்படத் தரிப்பை யானு லுலம்பொரு குவவுத்தோளாய்.

வேறு.

பஞ்சபா தகங்கள்போம் பகைகண் மாய்ந்திடு
மஞ்சலின் மறலியு மஞ்சி யாட்செயும்
வஞ்சநோ யொழிந்திடும் வறுமை தீர்ந்திடுந்
தஞ்சமென் றிதனைநீ தரித்தல் வேண்டுமால்.

சிவகவச முற்றிற்று.

---

வஞ்சிரபஞ்சரமென்னும்

# சத்திகவசம்.

தேவர்கள் தங்களுக்கு நெடுநாள் இடரிழைத்திருந்த துர்க்கனென்னும் அவுணனை உமாதேவியானவள் சங்கரித்து அவ்விடரை நீக்கியது கண்டு அத்தேவியை வணக்கஞ்செய்து துதிசெய்தது இக்கவசமென்றறிக.

அங்கையிற் கரகந் தாங்கும் பிரமாணி யருளி னோடுந்
துங்கமென் சென்னி காக்க வயிணவி துகளிலாக
மெங்கணும் காக்க செய்ய வேந்தெழி லுருத்தி ராணி
தங்குமெண் டிசையு மன்பு தழைத்திட வினிது காக்க. (௧)

கொன்னுனைச் சூலி சென்னி மயிரினைக் குறித்துக் காக்க
மன்னுவெண் பிறைதாழ் சென்னி வயங்கொளி நெற்றிகாக்க
பன்மயிர்ப் புருவ நாளும் பரிவொடு முமையாள் காக்க
வென்னையாண் மூக்க ணீச னிறைவிகண் ணிணைகள்காக்க. ()

வயமிகு மிமய வல்லி மூக்கினை மகிழ்ந்து காக்க
செயையொடு விசயை மேல்கீ ழிதழினைச் சிறந்து காக்க
வயிலுடைச் சுருதி தூய வஞ்செவி காக்க தண்ணென்
பயின்மல ருறையுஞ் செல்வி பல்லினை யுவந்து காக்க. (௩)

சண்டிமென் கபோலங் காக்க தவளநாண் மலரின் வைகு
மொண்டொடி நன்னுக்காக்க விசையமங் கலைமற்றெவ்வாக்
கண்கவர் நாடி காக்க காத்தியா யனியெஞ் ஞான்று
முண்டக மலரிற்றூய முகத்தினைச் சிறந்து காக்க. (௪)

காளமுண் டிருண்ட நீல கண்டிமென் கழுத்துக் காக்க
கோளில்பூ தார சத்தி சுவற்புறங் காக்க கூர்மி
நீளொளிச் சந்தி காக்க வயிந்திரி நெறியி னோடுந்
தோளிணை காக்க பத்மை துணைமல ரங்கை காக்க. (௫)

கமலைகை விரல்கள் காக்க விரசைகை யுகிர்கள் காக்க [ல்வி
திமிரமுன் டொளிரும் வெய்யோன் மண்டலத் துறையுஞ்செ
யெமதிரு வாகு மூலங் காக்கவா னவர்க ளோத்த
வமிர்தல கரிநா ணுளு மகன்மணி மார்பங் காக்க. (சு)

தரித்திரி யிதயங் காக்க தயித்தியர்ச் செருப்போண் மிக்க
கருத்தொடு முலைகள் காக்க சகத்தினி லிறைமை பூண்டோ
டிருத்தகு வயிறு காக்க திகழ்தபோ கதிதன் னுள்ளத்
தருத்தியி னுந்தி காக்க வசைவளர் முதுகுகாக்க. (எ)

கருதரு விகடை காக்க கடிதலம் பாமை வாய்ந்த
குருமணிச் சகனங் காக்க குகாரணி குய்யங் காக்க
வருடர வருமபாய கந்தினி யபானங் காக்க
தெருளுடை விபுலையென்றுஞ் சிறப்புடைக் குறங்கு காக்க.()

லளிதைமென்முழந்தாள்காக்க வியற்சபைகணைக்கால்காக்க
களிதரு கோளா வாய்ந்த பாட்டினைக் காக்க மிக்க
வளிகொள்பா தலத்திற்செல்வோளணிகெழு புறந்தாள்காக்க
வொளிர்நகம் விரல்கள் சந்திரி யுக்கிரி யுவந்து காக்க. (கூ)

தலத்துறை மடந்தை யுள்ளங் காலிணை காக்க தண்ணென்
மலர்த்திரு மனையைக் காக்க வயங்குகேத் திரதை யோங்கி
யுலப்பில்கேத் திரங்கள் காக்க பிரியகரா யொழிவ றுது
நலத்தகு மக்க டம்மை நன்குறக் காக்க வன்றே. (க0)

உயர்சன தனியெஞ் ஞான்று மொழிவறு மாயுள் காக்க
மயர்வறு சீர்த்தி யாவு மாதேவி காக்க மிக்க
செயிரறு தருமம் யாவுந் தனுத்திரி சிறந்து காக்க
வியல்புடைக் குலத்தை வாய்ந்த குலதேவி யினிது காக்க.()

சற்கதி பிரதை நல்லோ ரியைபினைத் தயாவிற் காக்க
விற்கொடும் போரி னீரில் வெளியினில் வனத்திற் சூதி
லிற்புற மதனி லோங்கு சர்வாணி காக்க வென்றுப்
பொற்றரு மலர்க ளேவிப் புங்கவ ரேத்தினாரே. (கஉ)

## சத்திகவசமுற்றிற்று.

---

இந்தவச்சிரபஞ்சரத்தை யாவர் செபித்தாலும், அவர்களு டைய தேகத்திலுண்டாகிய வெப்பு நோயொழியும். எட்டுத்த ரஞ்சலத்தில் அபிமந்திரித்து அதனை உட்கொண்டால், வயிற் றிலே பொருந்திய குன்மஞ் சூலை முதலிய நோயனைத்தும் நீங் கும். இரவில் வழிநடக்கும்போது செபித்தால், பூதம்பே யி வைகள் தொடரமாட்டாவாம். பிள்ளையைப் பெறமாட்டாம ல் வருத்தப்படுகின்ற மாதருடைய அருகிலிருந்து செபித்தா லும், அல்லது நீரிலோதி உட்கொள்ளக்கொடுத்தாலும், வி ரைவிலே வருத்தநீங்கிப் பிள்ளைகளைப்பெறுவார்கள். யுத்தத் திலே செபித்தால், சத்துருக்கள் தோல்வி யடைவார்கள். சி று பிள்ளைகளுக்கு நீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தால், வி யாதிகள் நீங்கும். இதை யாவரோதினாலும், அவர்களை உமா தேவிகாப்பாற்றுவாள்.

---

சிவமயம்.

## சகலகலாவல்லிமாலையென்னும்

# சரசுவதிதோத்திரம்.

---

வெண்டாமரைக்கன்றி நின்பதந்தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டாமரைக்குத் தகாதுகொலோசகமேழுமளித் [ங்
துண்டானுறங்கவொழித்தான்பித்தாகவுண்டாக்கும்வண்ண
கண்டான்சுவைகொள் கரும்பேசகலகலாவல்லியே. (௧)

நாடும்பொருட்சுவைசொற்சுவைதோய்தர நாற்கவியும்
பாடும்பணியிற்பணித்தருள்வாய்பங்க யாசனத்திற்
கூடும்பசும்பொற்கொடியேகனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ்சுமக்குங்கரும்பேசகல கலாவல்லியே. (௨)

அளிக்குஞ்செழுந்தமிழ்த்தெள்ளமுதார்ந்துன்னருட்கடலிற்
குளிக்கும்படிக்கென்று கூடுங்கொலோவுளங் கொண்டுதெள்
தெளிக்கும்பனுவற்புலவோர்கவிமழை சிந்தக்கண்டு [ளித்
களிக்குங்கலாபமயிலேசகல கலாவல்லியே. (௩)

தூக்கும்பனுவற்றுறைதோய்ந்தகல்வியுஞ்சொற்சுவைதோய்
வாக்கும்பெருகப்பணித்தருள்வாய்வட நூற்கடலுந் [று
தேக்குஞ்செழுந்தமிழ்ச்செல்வமுந்தொண்டர் செந்நாவினின்
காக்குங்கருணைக்கடலேசகல கலாவல்லியே. (௪)

பஞ்சப்பிதந்தருசெய்யபொற்பாத பங்கேருகமென்
னெஞ்சத்தடத்தலராததென்னேநெடுந் தாட்கமலத்
தஞ்சத்துவசமுயர்த்தோன்செந்நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத்தவிசொத்திருந்தாய்சகல கலாவல்லியே. (௫)

பண்ணும்பரதமுங்கல்வியுந்தீஞ்சொற் பனுவலும்யா
னெண்ணும்பொழுதெளிதெய்தநல்காயெழு தாமறையும்
விண்ணும்புவியும்புனலுங்கனலும் வெங்காலுமன்பர்
கண்ணுங்கருத்துநிறைந்தாய்சகல கலாவல்லியே. (சு)

பாட்டும்பொருளும்பொருளாற்பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும்படிநின்கடைக்கணல்காயுளங் கொண்டுதொண்டர்
தீட்டுங்கலைத்தமிழ்த்தீம்பாலமுதந் தெளிக்கும்வண்ணங்
காட்டும்வெள்ளோதிமப்பேடேசகல கலாவல்லியே. (எ)

சொல்விற்பனமுமவதானமுங்கல்வி சொல்லவல்ல
நல்வித்தையுந்தந்தடிமைகொள்வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக்கரிதென்றொருகாலமுஞ்சிதை யாமைநல்குங்
கல்விப்பெருஞ்செல்வப்பேறேசகல கலாவல்லியே. (அ)

சொற்கும்பொருட்குமுயிராமெய்ஞ்ஞானத்தின்றோற்றமென்
நிற்கின்றநின்னைநினைப்பவர்யார்நிலந் தோய்புழைக்கை [ன
நற்குஞ்சரத்தின்பிடியோடரசன்ன நாணநடை
கற்கும்பதாம்புயத்தாளேசகல கலாவல்லியே. (கூ)

மண்கண்டவெண்குடைக்கீழாகமேற்பட்டமன்னருமென்,
பண்கண்டளவிற்பணியச்செய்வாய்படைப்போன்முதலாம்,வி
ண்கண்டதெய்வம்பல்கோடியுண்டேனும்விளம்பிலுன்போற்
கண்கண்டதெய்வமுளதோசகல கலாவல்லியே. (க0)

சரசுவதிதோத்திரமுற்றிற்று.

---

சிவமயம்.

# இலக்குமிதோத்திரம்.

---

பூவுலகுமிடரியற்றுமடலவுணனுயிரொழியமுனிவுகூர்ந்த, பூவையுறழ்திருமேனியருட்கடவுளகன்மார்பிற்பொலிந்து தோன்றித், தேவருலகினும்விளங்கும்புகழ்க்கெல்லா புரத்தினிது சேர்ந்திலைகும், பாவையிருதாடொழுதுபழமறைதேர் குறுமுனிவன்பழிச்சுகின்றான். (க)

கொழுதியிசையளிமுரலுந் தாமரைமென்பொகுட்டினுறை கொள்கைபோல, மழையுறழுந்திருமேனிமணிவண்ணனிதய மலர் வைகுமானே, முழுதுலகுமினிதீன்றவருட்கொம்பேகர கமல முகிழ்த்தெந்நாளுங், கழிபெருங்காதலிற்றொழுவோர் வினைதீரவருள்கொழிக்குங் கமலக்கண்ணாய். (உ)

கமலைதிருமறுமார்பன்மனைக்கிழத்திசெழுங்கமலக் கையாய்செய்ய, விமலைபசுங்கழைகுழைக்கும் வேனிலான்றனையீன்றவிந்தைதூய, வமுதகும்பமலர்க்கரத்தாய் பாற்கடலுளவதரித்தோயன்பர்நெஞ்சத், திமிரமகன்றிடவொளிருஞ் செழுஞ்சுடரேயெனவணக்கஞ்செய்வான்மன்றோ. (ங)

மடற்கமலநறும்பொகுட்டிலரசிருக்குஞ்செந்துவர்வாய்மயிலேமற்றுன், கடைக்கணருள்படைத்தன்றோ மணிவண்ணனுலகமெலாங்காவல்பூண்டான், படைத்தனனுன்முகக்கிழவன் பசுங்குழவிமதிபுனைந்த பரமன்றானுந், துடைத்தனனின் பெருஞ்சீர்த்தியெம்மனோராலெடுத்துச்சொல்லற்பாற்றோ. ()

மல்லனெடும்புவியனைத்தும் பொதுநீக்கித்தனிபுரக்கு மன்னர்யாருங், கல்வியினிற்பேரறிவிற்கட்டழகினிகரில்லாக்காட்சியோரும், வெல்படையிற்பகைதுரந்து வெஞ்சமரில்வாகை

# இலக்குமிதோத்திரம்.

புனைவீரர்தாமு, மல்லிமலர்ப்பொகுட்டுறையு மணியிழைநின்
னருணோக்க மடைந்துளாரே.

செங்கமலப்பொலந்தாதிற்றிகழ்ந்தொளிரு மெழின்மேனி
த்திருவேவேலை, யங்கணுலகிருடுரக்குமலர்கதிராய்வெண்ம
தியாயமரர்க்கூட்டும், பொங்கழலாயுலகளிக்கும்பூங்கொடி
யேநெடுங்கானிற்பொருப்பின்மண்ணி, லெங்குளைநீயவணன்
றோமல்லல்வளஞ்சிறந்தோங்கி யிருப்பதம்மா. (சு)

என்றுதமிழ்க்குறுமுனிவன் பன்னியொடுமிருநிலத்தி லி
றைஞ்சலோடு,நன்றுனதுதிமகிழ்ந்தோநான்மறையோயித்
துதியைநவின்றோர்யாரும்,பொன்றலரும்பெரும்போகநுகர்
ந்திடுவரீங்கிதனைப் பொறித்தவேடு, மன்றன்மனையகத்திருப்
பின்வறுமைதருதவ்வையவண் மருவல்செய்யாள். (எ)

இலக்குமிதோத்திரமுற்றிற்று.